# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 25 திருவள்ளுவர் ஆண்டு 2053 சூன் திங்கள்


## உள்ளே...













# உணவுக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Althaiophobia | அடுமனை உணவச்சம் |
| Bland diet | ஊறிலா உணவு |
| Bread and cheese | பாலேடிட்ட ஊதப்பம் |
| Breadman | அடுநன் |
| Bush tucker | நரிக்குறவருணா |
| Clean eating | தூவுணா |
| Dark kitchen | தூதஞ்சல் உணவு/ எடுப்புணவு |
| Diet roll | பத்திய உணவு/திட்ட உணவு முறை |
| Edacious | உணவுப் பேரவா |
| Edacity | பேருண்டியவா |
| Energy food | ஊட்டவுணா |
| Epicure | ஊண் சுவைவிரும்பி |
| Exophagy | பிற இன மாந்தர் கறியுண்ணி |
| Feastrite | விருந்துமுறை |
| Female cook | அடுமகள்/அடுநள் |
| Masticate | நொறுங்க உண் |
| Meat diet | புலாலுணவு |
| Meat eating | புலாலுண்ணல் |
| Messmate | ஒரு சாலையுண் தோழர் |
| Postmealing | உண்டுத் தலைக்கூடல் |
| Puff pastry | குழையூண் பொதியப்பம் |
| Simnel cake | உலர்கனி வெட்டப்பம் |
| Soiree | மாலை விருந்து |
| Tachypha | விரைந்துத் திணித்துண்ணல் |
| Xero phagy | வறட்டுணா முறை |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 (வைகாசி)
சூன் திங்கள் 2022





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

# துறைதோறும் தொண்டு செய்வோம்

மாந்தவளம், அறிவுவளம் அதிகம் பெற்றிருக்கும் நாம் உலக அளவில் முதன்மை பெற துறைதோறும் துறைதோறும் தமிழை வளர்த்தெடுக்கும் பணிகளைச் செய்தல் வேண்டும். அரசு தான் இப்பணிகளைச் செய்ய வேண்டும் எனக் கருதாமல் தமிழுணர்வு கொண்ட ஒவ்வொருவரும் தனித்தமிழ்க் கலைச்சொற்களை இனம் காண வேண்டும்; அவற்றைப் பயன்படுத்த வேண்டும். தமிழ்மொழி குவளைக்குள் வைத்துப் பாதுகாக்கப்பட வேண்டியது அல்ல. உலக அரங்கில் கொண்டு சேர்க்க வேண்டியது.

"தொண்டு செய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே"

என்ற புரட்சிக்கவியின் பாவடிகளை ஏற்று கலைச்சொற்களைப் பயன்படுத்துவோம்.

கலைச்சொல் என்பது சொற்சிக்கனத்தோடு பொருளில் ஆழத்தையும் துல்லியத் தன்மையையும் கொடுத்தல் வேண்டும். அப்போதுதான் துறைசார் வல்லுநர்கள் அக்கலைச்சொற்களைப் பயன்பாட்டிற்குக் கொண்டுவர முடியும். எடுத்துக்காட்டாக, புறநானூற்றின் முதல் பாடலடியிலேயே ஊர்தி, மறை, உரு, குறள், ஏமம் என்ற ஐந்து கலைச்சொற்கள் ஆளப்பட்டுள்ளன.

"கண்ணி கார் கொன்றை காமர்
வண்ண மார்பின் தாரும் கொன்றை
ஊர்தி வால்வெள் ஏறே, சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்ஏறு என்ப
கறை மிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை
மறை நவில் அந்தணர் நுவலும் படுமே
பெண் உரு திறன் ஆகின்று அவ்உருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்
பிறை நுதல் வண்ணம் ஆகின்று அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே
எல்லா உயிர்க்கும் ஏமம் ஆகிய
நீர் அறவு அறியாக் கரத்து
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோற்கே!"

ஊர்தி – Vehicle
மறை –Scripture
உரு –Figure
திறன் –Skill
ஏமம் –Security

அதுமட்டுமா... இன்று நாம் கூறும் அடுக்குமாடிக் குடியிருப்புகளை நாலடியும் கூறுகிறது. ஆனால் நம்மைப் போல் அல்ல. மிக அழகான கலைச்சொல்லான நிரைமனை (Town house (or) a row house) என்று.

"நெட்டாற்றுச் சென்று நிரைமனையில்
கைந்நீட்டும்"
– நாலடி. -288

அருணகிரிநாதரின் திருப்புகழின் ஒற்றை வரிகள் எத்தனைச் சொற்களை நமக்கு இனம் சுட்டுகிறது.

**வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றே** இதில், **மணம், புணர்தல்** எத்துணை அழகான சொற்கள்.

இலக்கியத்துறை மட்டும் அல்லாது வேளாண்மை, அறிவியல், மருத்துவம், பொறியியல், வானியல், வான்கலவோட்டப் பொறியியல் (Aeronautical engineering), மீநுண்தொழில்நுட்பம் (Nanotechnology) உள்ளிட்ட துறைகளிலும் கலைச்சொற்கள் உள்ளன

### வேளாண்மைத் தொடர்பான கலைச்சொற்களில் சில

First ploughing – தலை உழவு
Cycle plough – சுழற்சி உழவு
Dry nursery – புன்செய் நாற்றங்கால்
Buck scrapper – மண் வாரும் கருவி
Tractor – இழுவுந்து
Seed plot – விதைப் பாத்தி
Green manure – பசுந்தாள் உரம்
Rainfed crop – வானவாரிப் பயிர்
Fertile soil – வளமண்

### மருத்துவம் சார்ந்த கலைச்சொற்களில் சில

Nostrum – கை மருந்து
Lipoidosis – கொழுப்பு நோய்
Gasp – மூச்சுத்திணறல்
Diagnosis – நோய் ஆய்வுறுதி
Dengu fever – முடக்குச் சுரம்

### சூழலியல் சார்ந்த கலைச்சொற்களில் சில

Soil drainage – மண் வடிகால்
Gene bank – மரபணு வைப்பகம்
Vermicompost – மண்புழு எச்ச எரு
Sea breeze – கடற்காற்று
Salt field – உப்பளம்

### வானூர்தியியல் (அ) வான்கலவோட்டப் பொறியியல் கலைச்சொற்களில் சில (Aeronautical Engineering)

ஏவூர்திகள்
பறக்கும் கலங்கள்
விண்கலங்கள்

என்ற சொற்களும் ஆளப்படுகின்றன.

Auto pilot – வலவன் ஏவாத் தன்னியக்கம் (வலவன் – வானூர்தி இயக்குநர்)

Air route – வான் தடம்

Hover plane – வட்டமிடு வானூர்தி

Projectile – வானூர்தி ஏவுகை

Tano meter – வேகமானி

## மீநுண் தொழில்நுட்பக் கலைச்சொற்களில் சில (Nanotechnology )

பெரிய அளவிலான பொருள்களையோ, கருவிகளையோ செய்ய துல்லியமாக அணு அளவிலும், மூலக்கூறு அளவிலும் பொருள்களைக் கையாண்டு செய்யும் முறை **மீநுண் தொழில்நுட்பம்** ஆகும். இதுவும் வளர்ந்துவரும் ஒரு துறை ஆகும்.

Sensor – உணரி

Bio – medicine – உயிரி மருத்துவம்

Light rays – ஒளிக்கதிர்கள்

Reflection – ஒளித்தெளிப்பு

துறைதோறும் துறைதோறும் எழுந்த எதிர்ப்புகளே பாவேந்தரைப் போர் மறவனாக மாற்றியது. தமிழ் துறைதோறும் அழுத்தப்படுவதும் அது தலை தூக்கினால் எதிர்க்கப்படுவதையும் கண்ட புரட்சிக்கவி களத்தில் நிற்கும் காளையாக மாறினார்.

நாயினுங் கீழாய்ச் செந்தமிழ் நாட்டார்  
நலிவதை நான் கண்டே  
ஓயுதல் இன்றி அவர் நலம் எண்ணி  
உழைத்திட நான் தவறேன்.

என்றார். தமிழ்நாட்டார் நலிவதைக் காணுங்கள் என்று காட்டவில்லை. நான் கண்டேன் என்கிறார். உழைத்திட வாருங்கள் என்று அவர் அழைப்பு விடுக்கவில்லை. உழைத்திட நான் தவறேன் என்று பொறுப்பேற்கிறார்.

மெத்த படித்தவர்கள் தான் மொழி காக்கும் பணியை, மொழிக்கு வளம் சேர்க்கும் பணியைச் செய்ய வேண்டும் என்று இராமல் தமிழுணர்வு கொண்ட மொழிப்பற்றுக் கொண்ட ஒவ்வொரு தனிமனிதனும் இதில் பங்கேற்க வேண்டும். ஆழ்கடலில் பொதிந்துள்ள முத்துகளைப் போல் நம் மொழியில் பொதிந்துள்ள தனித் தமிழ்க் கலைச்சொற்களைத் தேடித் தேடித் தொகுக்க வேண்டும். அதுமாத்திரம் அல்லாது அவற்றைப் பயன்பாட்டுக்குக் கொண்டு வர வேண்டும். எச்சொல்லுக்கும் ஒரு சிறப்பு உண்டு. இனி வருங்காலமும் கூறட்டும் எம்மொழி வளமையை!

அகரமுதலி இயக்ககம் 2016ஆம் ஆண்டிலிருந்து தமிழ்க்கலைச்சொல்லாக்கப் பணிகளை மேற்கொண்டுவருகிறது. இப்பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "மொழிகளின் கொடுக்கல் வாங்கல்கள்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், திருமிகு. ஆர்.இ. ஏசர் அவர்களின் "TAMIL LINGUISTIC INTO THE THIRD MILLENNIUM" என்னும் ஆங்கிலக் கட்டுரையும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழித்துறையின் முனைவர் பட்ட ஆய்வாளர் திரு. க. மாரிமுத்து அவர்களின், "சங்க இலக்கியத்தில் நாஞ்சில்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

---

**உலகுக்குத் தமிழ் மொழியின்**  
**உயர்வுதனைக் காட்டுவது சொற்பெருக்காம்**

– பாவேந்தர் பாரதிதாசன்

# மொழிகளின் கொடுக்கல் வாங்கல்கள்



அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம். பாரிசு

பிற மனிதர்களுடன் பழகாமல் – தொடர்புகொள்ளாமல் தனி ஒரு மனிதனால் வாழ்வது கடினம். இவ்வாறே மனிதன் பேசுகின்ற ஒரு மொழியும் இன்னொரு மொழிச்சொற்களுடன் கொடுக்கல் – வாங்கல், கடன் வாங்கல் இன்றி உலவுவதும் கடினம். பிறமொழிகளின் சொற்கள் சிலவாயினும் கலவாது மொழி ஒன்று வாழ்வது அரிது.

ஒரு மொழியின் உருவாக்கம் அதைப் பேசும் மக்களின் வரலாற்றுடன் பின்னிப் பிணைந்துள்ளது. மற்றைய நாகரிகம், சமயம், மொழி முதலானவற்றுடனான தொடர்பு, அயல் நாடுகளுடனான வர்த்தக, கலாசார உறவுகள், விஞ்ஞான –தொழில் நுட்பக் கண்டுபிடிப்புகள், முன்னேற்றங்கள், பிறநாட்டவர்களின் குடியேற்றம் போன்றவற்றால் அம்மொழிகளின் பாவனை நாளாந்தச் சொற்களில் கலந்துவிடுவது காலங்காலமாக நடந்து வருகிறது. ஒரு மொழியினர் இன்னொரு மொழியினருடன் தொடர்புகொண்டு பழகும்போது, எவரினது மொழி ஆட்சியில், அதிகாரத்தில் அல்லது நாகரிகத்தில் இருக்கிறதோ அவரின் மொழிச்சொற்கள் மற்ற மொழியில் ஊடுருவி ஒட்டிவிடுகின்றன. மொழியில் இரவல் சொற்கள் கௌரவ நோக்கத்திற்காகவும் விலக்கிவிடமுடியாதவாறு கடன் வாங்கப்படுகின்றன.

சொற்களைக் கடன் வாங்காத மொழி ஒன்று இன்று இல்லை என்று கூறும் அளவுக்குக் கடன் வாங்கல் நிகழ்ந்து வந்திருக்கின்றது. சொற்களைக் கடன் வாங்குவதாலும் ஒப்புவமையாக்கத்தாலும் புதியசொற்கள் ஒரு மொழியில் உருவாகின்றன. கடன் வாங்கும் மொழி கடன் பெறுமொழி எனவும், கடனைக் கொடுக்கும் மொழி கடன் தரும் மொழி எனவும் அழைக்கப்படும்.

தமிழில் முப்பத்துநான்கு (34) மொழிகளின் சொற்கள் இரவல் பெறப்பட்டிருக்கின்றன. இதனைப் போன்றே ஆங்கிலமும் சொல்வளத்தைப் பெருக்கிக் கொள்ள நாற்பத்திரண்டு(42) மொழிகளின் சொற்களை வரவேற்றிருக்கிறது. இரண்டாவது உலக மொழியாக விளங்கும் பிரெஞ்சும் இருபத்தைந்து (25) மொழிகளின் சொற்களைக் கடன்பெற்றிருக்கிறது.

கடன் வாங்கல் மூன்று நிலைகளில் இடம்பெறுகின்றது என ஜெஸ்பெர்சன் (Jesperson) கூறுகிறார்.

1) புதிய பொருள்களைப் பயன்படுத்தப் பிறமொழிப் பெயர்கள் கடன்வாங்கப்படுகின்றன.
2) ஒரு மொழியினரின் செல்வாக்கோ, உயர்வோ, பெற்றுள்ள ஒரு துறையைப் பிறமொழியாளர் கற்கும்போது அம்மொழிச்சொற்கள் கடன் வாங்கப்படுகின்றன.

3) மொழிபெயர்ப்பாளர் சோம்பல் காரணமாகத் தம் மொழிச் சொற்களைத் தேடும் முயற்சியின்றிப் பிறமொழிச்சொற்களை அப்படியே பயன்படுத்துவதாலும் சொற்கள் கடன் வாங்கப்படுகின்றன.

ஒரு மொழியில் பெரும்பாலும் பெயர்ச்சொற்களே அதிகமாகக் கடன் வாங்கப்படுகின்றன. வினைச்சொற்கள் குறைந்த அளவிலேயே இரவல் வாங்கப்படுகின்றன. இடைச்சொற்களைக் கடன்வாங்குதல் அரிது. துணைவினைச் சொற்கள் கடன் வாங்கப்படுதல் இல்லை.

ஒரு மொழியில் இன்னொரு மொழியின் சொற்கள் அதிகளவில் புகுகிறபோதெல்லாம் கடன்வாங்கிய மொழியின் பற்றாளர்கள் எதிர்ப்புக் குரல் எழுப்புவது அல்லது போராட்டத்தில் குதிப்பது போன்ற கிளர்ச்சிகள் பல மொழிகளின் வரலாற்றில் இடம்பெற்றிருக்கின்றன. தமிழ் மொழியில் வடசொற்கள், ஆங்கிலச் சொற்கள் படையெடுப்புச் செய்து தமிழைச் சிதைத்ததை உணர்ந்து மறைமலையடிகள், தேவநேயப்பாவாணர், இளங்குமரனார், கு.அரசேந்திரன் முதலான தமிழ்ப் பேரறிஞர்கள் போர்க்கொடி உயர்த்தி, மொழித் தூய்மைக்காக, தனித்தமிழுக்காக உழைத்தார்கள்.

ஆங்கிலம் பிறமொழிச் சொற்களின் கலப்பை,ஊடுருவலைப் பெரிதாக எதிர்க்காமல் மொழியின் சொல்வளத்துக்குக் கடன்வாங்கலை ஏற்றிருக்கின்றது. ஆனால் பிரெஞ்சு மொழியில் பிறமொழிகளின் சொற்கள் கலப்பதைத் தடுக்க Academic française என்ற மொழி வளர்ச்சி அமைப்பு 1635 இல் உருவாக்கப்பட்டது. ஜேர்மன் மொழியிலும் மிகுதியாகக் கலந்தபோது எதிர்ப்பு ஏற்பட்டது. இவ்வகையாக மொழிப்பற்றுப் போராட்டங்களில் ஈடுபட்டதற்குச் சான்றாகப் பல உதாரணங்களைக் கூறலாம். குறிப்பாக பிரெஞ்சு மொழியில் பெருமளவில் ஆங்கிலச் சொற்கள் நுழைந்து பிரெஞ்சியர்களின் நாளாந்தப் பயன்பாட்டில் பெருகியதற்கு எதிராக ReneEtiemble என்கிற பிரெஞ்சு அறிஞர் 1964 இல் Parlez–vous franglais? என்ற நூலினை வெளியிட்டு எதிர்ப்பைக் காட்டினார். இந்த அறிஞரின் கருத்துக்கு எதிராக Don Cook என்கின்ற ஆங்கில அறிஞரும் ஆங்கிலத்தில் உள்ள பிரெஞ்சுச் சொற்களின் எண்ணமும் தாக்கமும் பற்றி New York Heralt Tribune இல் எழுதினார்.

## தமிழ்

தமிழ்மொழி வரலாற்றை நோக்கின், சங்க காலத்திலிருந்து இருபத்தியோராம் நூற்றாண்டுவரை மொழிக்கலப்பு இருப்பதை அறியலாம். ஆழ்வார், நாயன்மார் காலத்தில் வடமொழிச் சொற்களின் செல்வாக்கு மிகுந்துவிட்டது. கி.பி. பதினான்காம் நூற்றாண்டுக்குப் பின் பெர்சியன், உருது வாயிலாக அரபுச் சொற்கள் தமிழில் கலந்தன. அதன் பின்னர் ஐரோப்பியர்கள் இந்தியா – இலங்கைக்கு வரத் தொடங்கியதிலிருந்து போத்துக்கேயம், டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலம் முதலான மொழிகளின் சொற்கள் தமிழில் திசைச் சொற்களாக வருகை தந்தன.

தமிழில் பிறமொழிக்கலப்பு – குறிப்பாக வடமொழிக் கலப்பு – தொல்காப்பியர் காலத்திலிருந்தே இடம்பெற்றிருக்கின்றது. திருவாசகத்தில் உள்ள 2810 சொற்களில் 373 வடசொற்கள் உள்ளன என மறைமலை அடிகள் குறிப்பிட்டார். திராவிட மொழிகளில் தெலுங்கு தமிழுடன் நீண்ட காலத் தொடர்புகொண்டிருந்ததனால் 325 தெலுங்குச் சொற்கள் தமிழில் உள்ளன. இவ்வாறு தமிழில் 38 கன்னடச் சொற்களும் உள்ளன.

எண்ணற்ற சொற்களைத் தவிர தேன்நிலவு, தொலைக்காட்சி,நீர்வீழ்ச்சி,ஓடிக்கலோன்,பரவாயில்லை (பரவா – ஹிந்தி, இல்லை – தமிழ்) ஆகியனவும் கடன் வாங்கலால் வந்தவையே.

தேன்நிலவு எனும் தமிழ்ச்சொல் Honey Moon என்ற ஆங்கிலச் சொல்வழிக் கருத்துப் பெயர்ப்புப் பெற்றது. நீர்வீழ்ச்சி என்ற தமிழ்ச்சொல்லும் Water Fall என்ற என்பதின்வழி வந்ததே . தொலைக்காட்சி என்ற சொல்முறையே கிரேக்க, இலத்தீன் மொழிச் சொற்கள்.

ஓடிக்கலோன், பரசூட் என்பன Eau de cologne, Parachute என்கின்ற பிரெஞ்சுச் சொற்களின்வழி உருவானவை. பரவாயில்ல என்பதில் 'பரவா' என்பது ஹிந்திச் சொல் "இல்லை" என்பது தமிழ்ச்சொல் இவ்வாறே தேநீர் என்பதில் 'தே' என்பதில் 'தே' என்பது சீனச் சொல் 'நீர்' (தண்ணீர்) தமிழ்ச்சொல்.

## English

மொழிகளில் அதிகம் கடன்வாங்கிய ஆங்கிலமொழி மிகச் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. இம்மொழி உலக மொழியானதற்கு பிறமொழிச்சொற்களை வரவேற்றதும் ஒரு முக்கிய காரணம்! ஆங்கிலமொழிச் சொற்களில் அரைவாசிக்கும் மேல் பிறமொழிச் சொற்களே இடம்பிடித்திருக்கின்றன.

ஆங்கிலத்தில் முதன் முதலில் 800 ஆம் ஆண்டில் டேனிஷ் மொழி கலந்தது. இதைத் தொடர்ந்து 1066ஆம் ஆண்டில் நேர்மன் பிரெஞ்சு அரசர் வில்லியம் இங்கிலாந்தை வெற்றி கொண்ட பின் பிரெஞ்சுமொழி பெருமளவில் கலந்தது.

- ஆங்கிலத்தில் முதல் வந்தது டேனிஸ் – பண்டைய நோர்ஸ் சொற்கள்

  : anger, cake, egg, law, root, sky, skirt, they, window...

- 

நோர்மன் – பிரெஞ்சுச் சொற்கள்:

boil, fry, dance, sculpture, clergy, priest, army, soldier, judge, court...

- ஹீப்று (யூத)ச் சொற்கள்:

  amen, babel, camel, Goliath, Jehovah, Messiah, satan...

- அரபுச் சொற்கள்:

  admiral, alcohol, algebra, assassin, camphor, cotton, mosque, syr ub, zero...

- பெர்சியன் சொற்கள்:

  arsenic, bazaar, caravan, jasmine, haki, magic, pashmina, shawl, turban

- ஹிந்திச் சொற்கள்:

  bangle, bungalow, guru, loot, pajamas, shampoo, thug, yoga....

- சமஸ்கிருதச் சொற்கள்:

  avatar, brahmin, karma, mantra, nirvana, swastika, sugar...

  'சர்க்கரை' எனும் சமஸ்கிருதச் சொல்லே ஆங்கிலத்தில் sugar, பிரெஞ்சில் sucre,

  டேனிஷில் sukker, டச்சில் suiker, ஜேர்மனில் zuker என்றெல்லாம் ஆனது

- ஆபிரிக்கச் சொற்கள்:

  apartheid, banjo, chimpanzee, gumbo, impala, yam, jazz, drop......

- செவ்விந்தியச் சொற்கள்:

  cacac, cashew, chocolate, hurricane, igloo, jaguar, papaya, potato, tobacco

- ஜப்பானியச் சொற்கள்:

  aikido, judo, sumo, bonsai, samurai, mikado, karaoke, kimono, tsunami

- *சீனச் சொற்கள்:*

  Feng shui, sampan, tea, yen, ginseng, kungfu

*சீனச்சொல்லான* t'e – "ச்ஏ" என்பது தேநீரை – தேத்தண்ணீரைக் குறிக்கும், இச்சொல்லின் வழியே தமிழில் தேநீர் – தேத்தண்ணீர், ஆங்கிலத்தில் tea ஜெர்மனில் tee, பிரெஞ்சில் the, இத்தாலியில் te, நோர்வேஜியனில் te என்றெல்லாம் சொற்கள் உருவாகின.

- இலத்தீனியச் சொற்கள்:

  பண்டைய ஆங்கிலத்தில் (Old English) 600ஆம் ஆண்டளவில் 175 இலத்தீன் சொற்கள் கலந்தன. அச்சொற்களில் சில

butere> butter, cese>cheese, disc>dish, pund> pound, stret>street

1500களில் மறுமலர்ச்சிக் காலப் பகுதியில் பிரெஞ்சு வழி ஆங்கிலத்துக்கு வந்த கடன் சொற்கள் : abdomen, anatomy, area, capsule, editor, exacavate insect, membrane, notorious, physics, volatile

- கிரேக்கச் சொற்கள்:

arithmetic, atom, autopsy, barbarous, catalogy catastrophe, climate, comedy, drama, history, homonym, metaphor, sekeleton, tragedy. பிரெஞ்சுச் சொற்கள்:

1100 ஆண்டிலிருந்து 1700 ஆண்டு வரை ஆங்கிலத்துக்கு ஆயிரக்கணக்கான சொற்களைப்

பிரெஞ்சு இரவல் தந்தது. change, charge, female, fruit, letter, male, mirror, art, diamond, fashion, jewel, painting, butcher, dinner, fry, pork, roast, veal, clergy, priest, attorney, prayer court, judge, country, parliament, revenue, royal, tax, army, battle, captain, navy, bourgeois, brassiere, buffet, cafe, grage, hotel, silhouette, haute couture, avant – garde, bidet, croissant, prestige.

- இத்தாலியச் சொற்கள்:

cadenza, diva, maestro, opera, piano, tempo, violin, broccoli, casino, malaria, lasagna, mozzarella, paparazzo, piazza, umbrella.

- இஸ்பானியச் சொற்கள்:

avocado, cargo, chinchilla, embargo, guerilla, marijuana, mosquito, tortilla

- ஸ்கன்டிநேவியச் சொற்கள்:

anger, cake, dirt, egg, get, husband, kick, saga, skin, sky, take, want, window, wing, muggy, rune, ski, nickel, tungsten.

- டச்சு (ஒல்லாந்து ) சொற்கள்:

boom, cruise, deck, dock, freight, leak, pump, tackle, duck, nap....

- ஜேர்மன் சொற்கள்:

hamburger, noodle, cobalt, quartz, zinc, rucksack, blitz, kindergarten.... தம் மொழிகளில் பிறமொழிகளில் இரவல் அல்லது கடன் சொற்கள் புகுந்ததை,கலந்ததை எதிர்த்துக் காலத்துக்குக் காலம் மொழிப்பற்றாளர்கள் கொதித்திருக்கின்றார்கள். ஆங்கிலத்தின் சொல்வளத்துக்குப் பல்வேறு சொற்களின் கடன் வாங்கலும் முக்கிய காரணம். பிற மொழிச்சொற்களின் கடன்வாங்கி ஜனநாயகமொழியாகவும் வரவேற்கும் மொழியாகவும் இருந்தபோதிலும் இம்மொழியில் பற்றாளர்களும் எதிர்ப்புணர்ச்சியைக் காட்டியிருக்கின்றார்கள் என்பதும் வரலாற்று உண்மை ஆகும்.

1600களில் "Polish and refine the English Tongue என Daniel Defoe உம் "Ascertainig and fixing our Language forever" என Jonothan siwift உம் எழுதி எதிர்த்திருக்கின்றார்கள்., Dictionary of the English Language ஐத் தொகுத்த Samuel Johnson உம் 1755 இல் இவ்வகையான எண்ணத்தில் ஆரம்பத்தில் இருந்தார் எனவும், பின்னர் இவ்வெண்ணத்தைக் கைவிட்டார் எனஅறியவருகிறது.

கடன்சொற்களின் வரவை ஒட்டி "The most hospitable and democratic language that has ever existed" என Richard Leaderer என்பவர் The Miracle of Language என்ற தனது நூலில் குறிப்பிட்டிருக்கின்றார். Carl Sandburg என்ற புலவரும் "The English Language hasn't got when it is by being pure" என மொழிந்திருக்கிறார்.

## Le français

பிரெஞ்சு மொழியும் பிறமொழிகளின் சொற்களைக் கொண்டிருக்கின்றது. இம்மொழியும் இருபத்தைந்து மொழிகளிலிருந்து பல சொற்களைக் கடன்வாங்கியிருக்கின்றது. பிரெஞ்சு இலத்தீனிலிருந்துதான் பெருமளவான சொற்களை இரவல் வாங்கியிருக்கின்றது.

- கோலுவா (le gaulois) :

alouette, bec, charrue, chemin, balai, chene, boue, char, cheval, murmur, chemise, cloche, tonneau, berceau, ambassade, bercer, craindnre...

- ஜெர்மனிய மொழிகள் (les germaniques)

banc, blanc, brun, blond, cresson, guerre, jardin, hache, marechal, lapin, fauteil, bourg, faucon, gagner, riche...

- இலத்தீன் (le latin)

| இலத்தீன் (latin) | மக்கள் மொழி (formation populaire) | கற்றவர் மொழி (formation savant) |
|---|---|---|
| auscultare<br>examen<br>navigare | ecouter<br>essaim<br>nager | ausculter<br>examen<br>naviguer |

- கிரேக்கம் (le grec)

பதினாறாம் நூற்றாண்டில் கிரேக்கச் சொற்கள் பிரெஞ்சில் கலக்கத் தொடங்கின. பின்னர் பதினேழாம்,, பதினெட்டாம், நூற்றாண்டுகளில் அதிகமாகப் புகுந்தன. ange, diable, prophete, apotre, eglise, bapteme, paradise, moine, bibliotheque, grammaire, dialogue, geographie, arithmetique, biologie, athee, telephone, atome.

| இலத்தீன் | பிரெஞ்சு | இலத்தீன் | பிரெஞ்சு | இலத்தீன் | பிரெஞ்சு |
|---|---|---|---|---|---|
| capsam nigrum | chasse noir | dominam homo | dame homme | pavorem augustum | peru aout |

இலத்தீன் மொழிச்சொல்லொன்று பிரெஞ்சில் இரு சொற்களாக ஆகியிருக்கிறது. hospitale என்ற இலத்தீன் சொல் hopital, hotel ஆகிய பிரெஞ்சுச் சொற்களைத் தந்திருக்கிறது.

- இத்தாலியம் (1'italien)

colonel, soldat, balcon, banque, piano, solfege, carnaval, pantalon

- இஸ்பானியம் (1'espagnol)

camarade, adjudant, guitre, moustique, tabac, tomate, cigare...

- டச்சு(ஒல்லாந்து) சொல் (leneerlandais)

bouquin, mannequin, colza, boulevard, blocus,...

- ஆங்கிலம் (l'anglais)

cabine, cheque, budget, bifteck, week-end, meeting, snob, match, record, wagon, tramway, sport, touriste, football, boxe, pull-over.

- அரபு (l'arabe)

zero, chiffre, algebre, alcool, sirop, cafe, jupe, coton, girafe...

- தமிழ் (le tamoul)

riz, catamaran, coolie, curry, mangue, vetiver, santal, gingembre

| கடன்தரும் மொழி | கடன் தந்த ஆண்டு | கடன் தந்த சொல் | தமிழ் வடிவம் |
|---|---|---|---|
| இத்தாலியம் | 1458 | banque | வங்கி |
| துருக்கியம் | 1460 | yoghourt | தயிர் |
| அஜ்ரெக் (செவ்விந்தியம் | 1666 | chocolat | சொக்களேற் |
| கொங்கோலியம் (ஆபிரிக்கா) | 1728 | zebre | வரிக்குதிரை |
| பொலினிசியம் | 1785 | tabou | தடைசெய்யப்பட்டது |
| இந்தி | 1837 | pyjama | பைஜாமா |
| யப்பானியம் | 1931 | judo | ஜூடோ |
| எஸ்கிமோ | 1945 | anorak | குளிராடை |
| பிரேசில் மொழி | 1556 | manioc | மரவெள்ளி |
| பிரேசில் மொழி | 1578 | ananas | அன்னாசி |

ஒரு மொழியில் பிறமொழிச்சொற்கள் கடன் வாங்கப்படுவதோ, கலக்கப்படுவதோ நின்று விடுவதாக இல்லை. எதிர்ப்புக்குரல் எழுப்பியும், புதுச்சொற்கள் புனைந்தும், சட்டம் போட்டும் செல்வாக்கான பிறமொழிச் சொற்கள் மக்களால் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

தமிழில் உள்ள பிறமொழிச் சொற்களில் ஐந்தில் நான்கு பகுதிச் சொற்கள் வடமொழிச் சொற்களே! ஆரியர் இந்தியாவில் குடியேறிய பின்னர் தமிழில் வடமொழிச் சொற்கள் கலப்புறத் தொடங்கின. ஆரிய மொழிச் சொற்கள் தமிழ் நடைபெற்று வரும்போது அவை வடசொல் என அழைக்கப்படுகின்றன.

தமிழில் கலந்துள்ள வடசொற்களைத் தற்சமம் தற்பவம் என இரண்டு வகைப்படுத்தலாம். ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவெழுத்தாலாகி, விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடசொல் தற்சமம் எனப்படும்

கமலம், குங்குமம், மணி, காலம் ...

ஆரியத்துக்கே உரிய சிறப்பெழுத்தாலும் பொதுவுஞ் சிறப்புமாகிய இருவகை எழுத்தாலும் ஆகித் திரிதல் முதலிய விகாரம் பெற்று தமிழில் வந்து வழங்கும் வடசொல் தற்பவம் எனப்படும்.

| ஆரியச்சொல் | வடசொல் | ஆரியச்சொல் | வடசொல் | ஆரியச்சொல் | வடசொல் |
|---|---|---|---|---|---|
| த்யாகம் | தியாகம் | இஷ்டம் | இட்டம் | ஸ்நேஹம் | சிநேகம் |
| பக்வம் | பக்குவம் | ஔஷதம் | ஔடதம் | மாஸம் | மாதம், மாசம் |
| ரஹஸ்யம் | இரகசியம் | சிருஷ்டி | சிருட்டி | வாஸநா | வாசனை |
| யந்த்ரம் | இயந்திரம் | சிஷ்யன் | சீடன் | அஹங்காரம் | அகங்காரம் |
| ஜ்வாலா | சுவாலை | சேஷ்டா | சேட்டை | ஸம்ஹாரம் | சங்காரம் |
| ஜ்யோதி | சோதி | நிமிஷம் | நிமிடம் | மஹிமா | மகிமை |
| ப்ரஜா | பிரசை | பாஷா | பாடை | அம்ருதம் | அமிர்தம் |
| அம்புஜம் | அம்புயம் | வர்ஷம் | வருடம் | கர்ணன் | கன்னன் |
| ஸடங்கு | சடங்கு | வேஷம் | வேடம் | காவ்யம் | காவியம் |
| அதிர்ஷ்டம் | அதிட்டம் | ஸ்வப்நம் | சொப்பனம் | ப்ரயாணம் | பிரயாணம் |
| | | ஸ்வர்க்கம் | சொர்க்கம் | ஸ்வாமி | சுவாமி |
| | | | | ஸம்லாபம் | சல்லாபம் |

அரசன், ஞானம், சுத்தி, சட்டம்...

சில வடமொழிப்பற்றாளர்கள் வடமொழியிலிருந்தே தமிழ் கடன் வாங்கியது எனவும், தமிழிலிருந்து வடமொழி ஒன்றும் கடன் வாங்கவில்லை என்றும், அதனால் தமிழை விட வடமொழியே உயர்வுடையது என்றும் கூறி வந்த காரணத்தால் தமிழர் நெஞ்சில் வடசொல் பற்றி காழ்ப்புணர்ச்சியும் வெறுப்புணர்ச்சியும் தோன்றின. இன்னும் சிலர் தமிழே வடமொழியிலிருந்து பிறந்தது என்று கூறியதும் பகையை வளர்த்தது. இதுபோன்ற காரணங்களால் தனித்தமிழ் இயக்கம் தோன்றியது.

தமிழ் வடமொழியிலிருந்து சொற்களைக் கடன்வாங்கியது போலவே வடமொழியும் தமிழ் மொழியிலிருந்து சொற்களைக் கடன் வாங்கியிருந்தது. வடமொழியில் கிட்டத்தட்ட 420 திராவிடச் சொற்கள் காணப்படுவதாக ஆராய்ச்சிகள் சுட்டுகின்றன.

### தமிழில் ஆரம்ப காலத்தில் புகுந்த வடசொற்கள்:

அகந்தை, ஆகாரம், இயமன், ஈசன், காயம், கிராமம், கேலி, சங்கடம், சாதம், சிசு, சுகம், சூரியன், தருமம், நிசம், பத்திரிகை, மரணம், வித்துவான், வைராக்கியம்....

ஒரு மொழி பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்குவதில் நன்மைகள் இருந்தாலும் தீமைகளும் உண்டு. எந்தமொழி கடன் வாங்குகிறதோ, அந்த மொழியில் கடன் வாங்கப்படும் சொல் கொடுக்கும் பொருளுடைய சொல் இருந்தாலும், அது வழக்கிழந்து போய்விடுகிறது. எடுத்துக்காட்டாக சாளரம், பலகணி, வளிவாய், காலதர், காற்றுவாரி, ஆகிய சொற்கள் தமிழில் இருந்தாலும் யன்னல் எனும் போத்துக்கேயச் சொல்லே பயன்படுத்தப்படுகிறது.

திராவிட மொழிகள் வடசொல் கலப்பினால் தமிழில் இருந்து தூரப்போய் வேறு மொழிகளாக ஆகிவிட்டன. திராவிடமொழிகளான கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகியவை இவ்வாறு தூரப்போன மொழிகள் ஆகும். தமிழைச் சிதைக்கும் வகையில் வடசொற்களைத் தமிழ்ச்சொற்களுடன் சரிக்குச்சரி புகுத்தி மணிப்பிரவாளம் எனும் நடை உருவாக்கப்பட்டது.

## பிறமொழிகளில் தமிழ்

தமிழில் பிறமொழிச்சொற்கள் கடன்வாங்கப்பட்டது போல், பிறமொழிகளிலும் தமிழ்ச் சொற்கள் கடன்வாங்கப்பட்டிருக்கின்றன.

வடமொழியில் கலந்த தமிழ்ச்சொற்கள

| தமிழ் | வடசொல் | தமிழ் | வடசொல் |
|---|---|---|---|
| அனல் | அனல | முரசு | முரச |
| குடம் | குட | எருமை | ஹெறம்ப |
| தண்டம் | தண்ட | உடுக்கை | குடுக்க |
| பள்ளி | பள்ளி | பிண்டம் | பிண்ட |
| மாலை | மாலா | வளை | வளைய |

– கிரேக்கம்
அரிசி, இஞ்சி, கருவா
– ஹீப்ரு
தோகை, தேக்கு, ஊர்.
–ஆங்கிலம்

| தமிழ் | ஆங்கிலம் | ஆண்டு | தமிழ் | ஆங்கிலம் |
|---|---|---|---|---|
| அணைக்கட்டு | anicut | 1784 | மிளகுத்தண்ணீர் | mulliggatanney |
| கட்டுமரம் | catamaram | 1697 | சுருட்டு | cheroot |
| கயிறு | coir | 1582 | பந்தால் | pandal |
| கறி | curry | 1898 | கொப்பறை | copra |
| காசு | cash | 1598 | பறையன் | pariah |
| கூலி | coolie | 1598 | சந்தனம் | santal |
| தேக்கு | teak | 1698 | இஞ்சி | ginger |
| பிண்ணாக்கு | poonac | 1890 | அரிசி | rice |
| பூசை | pija | 1806 | ஆனைகொன்றான் | anaconda |
| மாங்காய் | mango | 1665 | | |
| வெட்டிவேர் | vetiver | 1858 | | |
| வெற்றிலை | betel | 1553 | | |

'இஞ்சி' என்ற தமிழ்ச்சொல் 20 மொழிகளில் கடன்வாங்கப்பட்டிருக்கிறது.

| மொழி | சொல் | மொழி | சொல் |
|---|---|---|---|
| 1) அய்ரிஷ் | ginger | 12) போர்த்துக்கேயம் | gengivre |
| 2) அரபு | zanjabil | 13) போலந்துமொழி | imbier |
| 3) அல்பேனியன் | zenxhefil | 14) ரஷ்யன் | inbir |
| 4) ஆங்கிலம் | ginger | 15) ருமேனியம் | ghimber |
| 5) இத்தாலியன் | zenzero | 16) ஹங்கேரியன் | gyomber |
| 6) கிரேக்கம் | zingiberis | 17) ஹீப்ரு | zenghebhil |
| 7) சுவீடனியம் | ingefara | 18) ஜேர்மன் | ingwer |
| 8) டச்சு | gember | 19) ஸ்பானியம் | jengibre |
| 9) துருக்கியம் | zencefil | 20) ஸ்வாகிலி | tangawizi |
| 10) பாரசீகம் | zanjabil | | |
| 11) பிரெஞ்சு | gingembre | | |

'சர்க்கர' என்ற சமஸ்கிருதச் சொல் 8 மொழிகளில் கடன் வாங்கப்பட்டிருக்கிறது

| Language | word |
|---|---|
| Sanskrit | Sarkara |
| English | Sugar |
| French | Sucre |
| German | Zucker |
| Dutch | Suiker |
| Danish | Sukker |
| Spanish | Azucar |
| Polish | Cukier |
| Hungarian | Cukor |
| Tamil | Sarkarai |

"சா' (cha) எனும் மண்டாரின் சீனச்சொல்லும், 'தே' (te)எனும் சீனச்சொல்லும் 10 மொழிகளில்டன்வாங்கப் பட்டிருக்கின்றன.

| Language | word |
|---|---|
| Chinese (mandarin) | Ch'a |
| English | tea |
| French | thc |
| German | tee |
| Italian | te |
| Spanish | tc |
| Portuguese | cha |
| Greek | tsai |
| Persian | cha |
| Russian | cha |
| Norwegian | te |
| Tamil | the (தே) |

நன்றி: தெரியத் தெரியத் தெரியாமை தெரியும்

# கீழ்க்காணும் ஊர்களின் தொன்மைப் பெயர்களோடு பொருத்துக

| | | |
|---|---|---|
| விருத்தாசலம் | – | திருச்சீரலைவாய் |
| பழனி | – | கண்ணன்பாடி |
| திருச்செந்தூர் | – | திருவாவினன்குடி |
| சிதம்பரம் | – | புளியங்காடு |
| கும்பகோணம் | – | திருமுதுகுன்றம் |
| மதுரை | – | தகடூர் |
| பிருந்தாவனம் | – | குடமூக்கு |
| திண்டிவனம் | – | நான்மாடக்கூடல் , ஆலவாய் |
| தர்மபுரி | – | கருமலை |
| கிருஷ்ணகிரி | – | தில்லையம்பதி |

விடை : 17 ஆம் பக்கம்

# கடல்

## (ஒருபொருட் பன்மொழி)

ஆழி,
முந்நீர்,
நெடுநீர்,
வாரி,
தொன்னீர்,
புணரி,
மாநீர்,
வேலை,
முதுகயம்,
பெருநீர்,
பரவை,
அம்பரம்,
ஆர்கலி,
அளக்கர்,
பரவை,
வீரை,
வேலாவலயம்,

நீர்,
வெள்ளம்,
சிந்து,
உப்பு,
நேமி,
வலயம்,
அத்தி,
அலை,
உவா,
உவரி,
ஓதம்,
அரி,
குரவை,
அழுவம்,
தெண்டிரை,
கார்கோள்.

# சங்க இலக்கியத்தில் நாஞ்சில்


**க. மாரிமுத்து**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்மொழித் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 005




பழந்தமிழ் இலக்கியங்களாகப் போற்றப்படுவன சங்க இலக்கியங்கள் ஆகும். இவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனும் பதினெண் மேற்கணக்கு நூல்களின் தொகுப்பாகும். சங்க இலக்கியங்கள் கி.மு. 3 முதல் கி.பி. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்பது அறிஞர்களின் கருத்தாக உள்ளது. தமிழ்ச் செம்மொழித் தகுதியை அடையச் சங்க இலக்கியங்களும் ஓர் இன்றியமையாக் காரணமாக அமைந்துள்ளன. இவ்விலக்கியங்கள் அகம், புறம் என்னும் தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டை மையமிட்டுத் தொகுக்கப்பட்டுள்ளன. இவை எண்ணற்ற கலைச் சொற்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன. அவற்றுள் ஒரு கலைச் சொல்லாகத் திகழும் நாஞ்சில் என்பது ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளது.

சொல் அது தோன்றிய காலத்தில் அதன் சொன்மையையும் பொருண்மையையும் உணர்த்த வேண்டும் என்பது தொல்காப்பியரின் கருத்து. அதனால்தான் அவர் "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" (தொல்.பெய.1) என்றும் "பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும் சொல்லி னாகும் என்மனார் புலவர்" (தொல்.பெய.2) என்றும் இலக்கணம் வகுத்துள்ளார். அவரே காலத்தின் மாற்றத்திற்கேற்ப புதிய சொற்கள் தோன்றும் என்பதையும் "கடிசொல் இல்லை காலத்துப் படினே" (தொல்.எச்.56) என்றும் குறிப்பிடுகின்றார். பிற்கால இலக்கணியான பவணந்தியாரும் "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே" (நன்.462) என்கிறார். மொழி காலந்தோறும் மாறுதலுக்கு உள்ளாகின்றது. மொழி மாற்றத்திற்கேற்ப அதன் சொற்களிலும் அவற்றைப் பொருள் கொள்ளும் முறைமைகளிலும் மாற்றங்கள் உள்ளாகின்றன. சான்றாக, சங்க காலத்தில் நாற்றம் என்பது நறுமணத்தைக் குறித்தது; சமகாலத்தில் துர்நாற்றத்தைக் குறிப்பதாக மாற்றம் பெற்றுள்ளது. அவ்வகையில் தமிழின் தொன்மை இலக்கியங்களாகக் கருதப்பெறும் சங்க இலக்கியங்களில் காணலாகும் நாஞ்சில் என்னும் சொற்பொருளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## நாஞ்சில்: அகராதிப் பொருள்

நாஞ்சில் என்பதற்குக் கலப்பை1, மதிலுறுப்பு2 என்னும் இரு பொருள்களைத் தருகிறது இருபதாம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட சொற்றொகுதியான நா. கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதி. நாஞ்சில் நாடு என்பதற்கு மலையாளம்1 என்றும் நாஞ்சிற்படையோன் என்பதற்குப் பலபத்திரன்1 என்றும் பொருள் தருகிறது. (நா. கதிரைவேற் பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 873)

## சங்க இலக்கியங்களில் நாஞ்சில்

சங்க இலக்கியங்களில் 'நாஞ்சில்' என்னும் சொல் பதினெட்டு (18) இடங்களில் பயின்று வந்துள்ளது. அவைமுறையே, பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப்படையில் 199–ஆம் அடி; எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்தில் 19:17, 25:01, 26:02, 58:17 ஆகிய நான்கு பாடல்கள்; பரிபாடலில் 1:5, 4:39, 20:53 ஆகிய மூன்று பாடல்கள்; கலித்தொகையில் 8:5–ஆம் பாடல்; அகநானூற்றில் 42:05, 141:05 ஆகிய இரு பாடல்கள்; புறநானூற்றில் 19:11, 20:11, 56:04, 137:12, 139:08, 140:01, 380:08 ஆகிய ஏழு பாடல்கள் என மொத்தம் பதினெட்டு இடங்களில் காணப்படுகின்றது. 'நாஞ்சிலவை' என்னும் சொல் ஓரிடத்திலும் (பரி.15:57), 'நாஞ்சிலான்' என்னும் சொல் ஓரிடத்திலும் (கலி.36:01), 'நாஞ்சிலோன்' என்னும் சொல் ஓரிடத்திலும் (பரி.13:35) காணப்படுகின்றது. ஆக, நாஞ்சில் என்பது தனிச்சொல்லாகப் பதினெட்டு இடங்களிலும் அடிச்சொல்லாக மூன்று இடங்களிலும் என மொத்தம் 21 இடங்களில் பயின்று வந்துள்ளது (பெ. மாதையன், சங்க இலக்கியச் சொல்லடைவு, ப. 402). அவற்றுள் நாஞ்சில் என்னும் சொல் கலப்பை என்னும் பொருளிலும் மலை என்னும் பொருளிலும் இடம்பெறுகின்றன. அவை பின்வருமாறு:

## பதிற்றுப்பத்தில் நாஞ்சில்: கலப்பை

எட்டுத்தொகையில் உள்ள புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இரு புறநூல்களில் நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது என்னும் முறைமையில் மூவேந்தர்களில் முதலாவதாக வைத்து எண்ணப்படும் சேர வேந்தர்கள் பதின்மரைப் பற்றிய பாடல்கள் பத்துப் பத்தாகத் தொகுக்கப்பெற்றுப் பதிற்றுப்பத்தாக இயலுகின்றது. இவற்றில் முதற்பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை என்பது வரலாறு. பதிற்றுப்பத்தில் நான்கு பாடல்களில் நாஞ்சில் என்னும் சொல்லாட்சி இடம்பெற்று, எல்லா இடங்களிலும் கலப்பை என்ற பொருளையே குறிக்கின்றன. அவற்றை,

நிலம் கண் வாட நாஞ்சில் கடிந்து நீ
வாழ்த லீயா வளன்று பைதிரம் (பதி. 19:17–18)

என்னும் அடிகளில் உழுவாரின்றிக் கலப்பைகள் வெறுக்கப்பட்டன; அதனால் நிலம் வளமின்றிப் பொலிவிழந்து காணப்படுகின்றது எனவும்,

மா ஆடிய புலன் நாஞ்சில் ஆடா (பதி. 25:01)

உமது படைகளில் உள்ள குதிரைகள் சென்றதனால் பகைவருடைய வயல்களில் கலப்பைகள் உழாது. ஏனெனில், குதிரைகளின் கால் தடங்களே அந்நிலத்தை உழுது விட்டன எனவும் பொருள் தருகின்றது.

களிறு ஆடிய புலம் நாஞ்சில் ஆடா (பதி. 26:02)

களிறு ஆடிய கொல்லைத்தறையில் கலப்பைகள் உழ வேண்டிய தேவை இருக்காது. இங்குக் களிறு என்றது பன்றியை ஆகும். பன்றியைக் களிறு எனலாகுமா எனில், "கேழற் கண்ணும் கடிவரை யின்றே" (தொல். மரபி. 341) என்னும் தொல்காப்பிய இலக்கணப்படி பன்றியின் ஆண்பாற் பெயரும் களிறு எனலாகும் என்பதை வைத்து பன்றியைக் களிறு என வழங்கியுள்ளார் புலவர். புலம் என்பது நீரற்ற வறண்ட நிலத்தைக் குறிப்பதாகும்.

நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின் (பதி. 58:17)

கலப்பைகள் உழுத படைச்சால் என்பது இதன் பொருள். இப்பாடலடிகள் அனைத்தும் நாஞ்சில் என்பதற்குக் கலப்பை என்னும் பொருளைத் தருவதாக அமைந்துள்ளன.

## பரிபாடலில் நாஞ்சில்: கலப்பை

கலப்பை என்னும் பொருளில் பரிபாடலில் திருமாலைக் குறிக்கும் நான்காம் பாடலிலும், வையை ஆற்றைக் குறிக்கும் 20ஆம் பாடலிலும்,

நின் ஒன்று உயர் கொடி நாஞ்சில் (பரி 4:39)

காரிகை நீர் ஏர் வயல் காம களி நாஞ்சில் (பரி 20:53)

நாஞ்சில் என்னும் சொல் கலப்பையைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இவ்வடிகளில் திருமாலின் கொடிகளுள் ஒன்றாகக் கலப்பைக் கொடியும் காமமிக்க கலப்பை என்றும் வருகின்றது. மேலும், கூர்மையான வளைந்த கலப்பை என்னும் பொருளிலும் புழுதியாகிய நிலத்தை உழும் வளைந்த வாயினையுடைய கலப்பையைப் போன்ற யானை என்னும் பொருளிலும்,

வள் அணி வளை நாஞ்சிலவை (பரி 15:57)

விறன்மிகு வலியொடு பொலிபகழ் புழுதியின்
நிறன் உழும் வளை வாய் நாஞ்சிலோனும்
(பரி 13:34,35)

என்னும் பாடலடிகள் பரிபாடலில் இடம்பெற்றுள்ளன.



## அகநானூற்றில் நாஞ்சில்: கலப்பை

அகநானூற்றில் இரண்டு கவிதைகளில் நாஞ்சில் இடம் பெற்றுள்ளது. குறிஞ்சித் திணைக் கவிதையில் ஓரிடத்திலும் பாலைத்திணைக் கவிதையில் ஓரிடத்திலும் நாஞ்சில் என்ற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை,

நாடு வறம் கூர நாஞ்சில் துஞ்ச
கோடை நீடிய பைதுஅறு காலை
(அகம். குறிஞ்சி. 42:5)

என்னும் அடிகள் பசுமையை ஒழிக்கும் கோடைக்கால வெயிலினால் நாடு நலமற்று வறுமையில் வாடுகின்றது. வெயிற்காலத்தில் மழையில்லாததால் கலப்பைகள் வீட்டில் தூங்குகின்றன என்று உழுதொழிலாளியின் வறுமையைப் பேசுவதாக அமைந்துள்ளன.

நெஞ்சம் நனிபுகன்று உறையும் எஞ்சாது
உலகு தொழில் உலந்து நாஞ்சில் துஞ்சி
(அகம். பாலை. 141:5)

என் தலைவன் விரைவில் திரும்பி வருவார் என என் நெஞ்சம் மிகவும் ஏங்குகின்றது. என் தலைவன் வராத காரணத்தால் கலப்பை செத்துக் கிடக்கின்றது என்று தலைவனைப் பிரிந்த தலைவி தோழியிடம் புலம்புதவதாக அமைந்துள்ளன.

இவ்விரு பாடல்களிலும் நாஞ்சில் எனப்படும் கலப்பை தலைவனுக்குக் குறியீடாக வழங்கப்படுகிறது. குறிஞ்சிப்பாடலில் கோடையின் காரணமாக கலப்பையைக் கொண்டு நிலத்தை உழவேண்டிய தலைவன் வீட்டில் உறங்குவதாகவும் பாலைப்பாடலில் பிரிந்து சென்ற தலைவன் வீடு வராததால் கலப்பை செத்துக்கிடப்பதாகத் தலைவி வருந்துவதாகவும் அமைந்துள்ளது. இங்குக் கலப்பை தலைவனின் குறியீடாகவும் நிலம் தலைவிக்குக் குறியீடாகவும் வைத்துப் பாடப்பெற்றிருப்பது உய்த்துணரத்தக்க உள்ளுறை பொருளாகும்.

## புறநானூற்றில் நாஞ்சில்: கலப்பை

புறநானூற்றில் சேரவேந்தன் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக் குருங்குன்றூர்க் கிழார் பாடிய பாடலில், நின்னாட்டு மக்கள் உழுபடைக் கருவியாகிய கலப்பையை அல்லாது கொலைப்படைக் கருவியை அறியாதவர் என்று கூறுமிடத்தும், நன்மாறனைப் பாடிய நக்கீரர், போரை விரும்பும் கலப்பையை உடையவனும் பனைக்கொடியை உடையவனுமாகிய பலதேவர் என்னும் பொருளில் கூறுமிடத்தும்,

நாஞ்சில் அல்லது படையும் அறியார் (புறம் 20:11)

அடல் வெம் நாஞ்சில் பனைக்கொடியோனும் (புறம் 56:4)

நாஞ்சில் என்னும் சொல்லாட்சி கலப்பையைக் குறிப்பதாகவே அமைந்துள்ளது.

## மலை

நாஞ்சில் என்பதற்கு மலை என்னும் பொருள் தரும் கவிதைகள் புறநானூற்றில் நான்கு இடங்களில் வருகின்றன. அவை யாவும் நாஞ்சில் வள்ளுவன் என்ற கொடைவள்ளலைப் புலவர்கள் பாடிய பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றன.

நாஞ்சில் வள்ளுவனை ஒருசிறைப் பெரியனார், மருதன் இளநாகனார், ஔவையார், கருவூர்க் கதப்பிள்ளை முதலான புலவர்கள் பாடிய பாடல்களில்,

செம்வரை படப்பை நாஞ்சில் பொருந (புறம் 137:12)
உயர்சிமைய உழாஅ நாஞ்சில் பொருந (புறம் 139:8)
தடவுநிலை பலவின் நாஞ்சில் பொருநன்
மடவன் மன்ற, செந்நாப் புலவீர் (புறம் 140:1)
தீம்சுளை பலவின் நாஞ்சில் பொருநன் (புறம் 380:8)

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றிலிருந்து நாஞ்சில் என்பது மலையைக் குறிக்கவும் நாடன் என்பது மலைநாட்டுத் தலைவனான நாஞ்சில் வள்ளுவனைக் குறிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. செம்மையான சிவந்த மலைப்பக்கத்தை உடைய வீரன்; உயர்ந்த உச்சி, உழப்படாத மலை நாட்டு வீரன்; பலாப்பழங்கள் தரையைத் தடவுகின்ற மலையை உடைய பொருநன்; இன்சுவைப் பலா விளையும் மலைக்குத் தலைவன் என்னும் பொருள்களில் இவ்வரிகள் இடம் பெற்றுள்ளன.

இவ்வரிகளில் காணலாகும் நாஞ்சில் என்பது மலையைக் குறிக்கப் புலவர்களால் பயன்படுத்தப்பட்ட சொல் என்பது பெறப்படுகிறது. இவையாவும் நாஞ்சில் வள்ளுவன் என்னும்



மலை நாட்டுத் தலைவனைப் பாடப்பெற்ற பாடல்களில் பயின்றுவரும் சொல் என்பதும் பெறப்படுகிறது.

## உவமையும் கற்பனையும்

கலப்பைக்கு உவமையாக யானையின் துதிக்கையையும் உடும்பின் முகத்தையும் மயிலின் கழுத்தையும் உவமிக்கின்றனர் புலவர்கள். இவற்றை,

பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்பு முகமுழு கொழு மூழ்க ஊன்றி
(பெரும். 199–200)

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. பிடியினது வாயைப் போன்ற வளைந்த வாயினையுடைய கலப்பையின் உடும்பினது முகத்தை ஒத்த பெருங்கொழு மறைய அமுக்கி என்னும் பொருளில் இவ்வடிகள் இடம்பெற்றுள்ளன. இதில் கலப்பைக்கு யானையின் துதிக்கையும் கொழுவிற்கு உடும்பின் முகமும் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. பத்துப்பாட்டு நூல்களில் பெரும்பாணாற்றுப் படையில் மட்டுமே நாஞ்சில் இடம் பெற்றுள்ளது. மேலும்,

எழில் வேழம் ஏந்திய
வாய் வாங்கும் வளை நாஞ்சில் ஒரு_குழை_ ஒருவனை
(பரி 1:4–5)

என்னும் இவ்வடிகள் அழகிய யானையின் வாயினை ஒத்த வளைந்த கலப்பையால் நிலத்தை உழுத ஒருவன் என்னும் பொருளில் வந்துள்ளன. இங்குக் கலப்பைக்கு யானையின் துதிக்கை ஒப்புமை கூறப்பட்டுள்ளது.

கலித்தொகையில் கலப்பையைக் குறிக்கும் நாஞ்சில் என்ற சொல் வரும் கவிதையில்,

உறல்ஊறு கமழ்கடாத்து ஒல்கிய எழில் வேழம்
வறன் உழு நாஞ்சில் போல் மருப்பு ஊன்றி நிலம் சேர
(பாலைக்கலி 8:4–5)

என்னும் அடிகள் இடம்பெறுகின்றன. கமழும் ஊறுகின்ற மதநீரை உடைய யானைகள் அழகு கெட்டு ஈரமில்லாது வறண்ட நிலத்தை உழுகின்ற கலப்பைகள் போல தம்முடைய கொம்புகளை ஊன்றி நிலத்தை விட்டு அகலாமல் அங்கேயே நின்றன என்னும் பொருளில் வருகின்றது. இவ்வரிகளின்





வாயிலாகக் கலப்பைக்கு உவமை கூறும் புலவரின் கற்பனைத் திறம் வியப்பிற்குரியதாக அமைந்துள்ளது. மேலும்,

மயங்கிக் குன்றத்து இறுத்த குரீஇ
இனம்போல
அம்புசென்று இறுத்த அரும்புண் யானைத்
தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து
நாஞ்சில் ஒப்ப நிலம் மிசை புரள
(புறம் 19:8–11)

என்னும் புறநானூற்றுப் பாடலில், மலையில் பறந்துகொண்டிருக்கும் குருவிகள் போல அம்புகள் சென்று தைப்பதால் துளையுண்ட துதிக்கை துண்டாக்கப்பெற்று நிலத்தில் விழுகிறது. அந்தத் துதிக்கை கலப்பையைப் போல நிலத்தில் புரளுகின்றது என்பதாக இவ்வரிகள் சுட்டுகின்றன. இங்குக் குருவிகள் அம்புக்கு உவமையாகவும் துதிக்கை கலப்பைக்கு உவமையாகவும் கையாளப் பெற்றுள்ளது.

கொடிய வலிய கலப்பைப் படையினை உடைய நம்பி மூத்தபிரானாகிய பலதேவன் தோளிலே மாலையை அணிந்திருப்பதைப் போல உயர்வான இடத்தில் அமைந்த மரத்தில் மயிற்கூட்டம் ஓசையெழுப்பும் என்னும் பொருளில்,

கொடு மிடல் நாஞ்சிலான் தார்போல் மராத்து
நெடுமிசைச் சூழும் மயில் ஆலும் சீர்!
(பாலைக்கலி 36:1–2)

என்னும் அடிகள் இடம்பெறுகின்றன. இங்கு நாஞ்சில் என்பது கலப்பைப் படையினை உடைய பலதேவனுக்குக் குறியீடாக அமைந்துள்ளது எனினும் கலப்பை என்னும் பொருளிலேயே நாஞ்சில் என்னும் சொல்லாட்சி இடம்பெற்றுள்ளதும் உய்த்துணரத்தக்கது.

## அறியப்படுவன

இலக்கியம் எவ்வாறு ஒரு சமுதாயத்தின் முகத்தைக் காட்டும் கண்ணாடியாக இருக்கின்றதோ அதைப்போலவே, ஒரு சொல் என்பது அது தோன்றிய காலத்தின் அது வழங்கும் இடத்தின் பண்பாட்டை வெளிக்கொணர்வதாக அமையும் என்பதற்கு நாஞ்சில் என்னும் சொல் ஒரு சான்றாக அமைந்துள்ளது.

அந்த வகையில் அகப்புறக் கவிதைகளின் கூட்டுத்தொகுதியாக விளங்கும் சங்க இலக்கியத்தில் வழங்கப்பெறும் நாஞ்சில் என்னும் சொல் மலையையும் வன்நிலத்தை உழும் கலப்பையையும் குறிக்கும் சொல்லாக விளங்குகின்றது.

நாஞ்சில் என்பது கலப்பையைக் குறிக்குமிடத்து யானையின் துதிக்கைக்கும் கலப்பைக் கொழு உடும்பின் முகத்திற்கும் உவமிக்கப்பட்டுள்ளது.

கலப்பை உழும் இடம் புலம் எனப்படுகிறது. புலம் என்பதற்கு ஈரமற்ற கொல்லைத் தறை என்றும் வன்நிலம் என்றும் பொருள் குறிக்கப்படுகிறது.

சங்க அகக்கவிதைகளில் பயின்றுவரும் நாஞ்சில் என்ற சொல்லாட்சி கலித்தொகையில் பாலைக்கலியிலும் அகநானூற்றில் குறிஞ்சி மற்றும் பாலைத்திணைக் கவிதைகளிலும் மட்டுமே இடம்பெற்றுள்ளது.

கலித்தொகையிலும் பரிபாடலிலும் வரும் நாஞ்சிலான், நாஞ்சிலோன் என்னும் சொற்களுக்குக் கலப்பையை உடைய பலதேவன் என்னும் பொருள் படும்படி நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும் உரை கூறுகின்றனர். இதற்கு அவ்விரு உரையாசிரியர்களும் தாம் சார்ந்த வைதீக சமயத்தின் தாக்கம் ஒரு காரணமாக அமைந்திருக்கலாம்.

குறிஞ்சிக்கு மலையும் மலைசார் இடமும் நிலமாகக் கொள்ளப்படும். பாலைக்குத் தொல்காப்பியர் நிலத்தைக் குறிப்பிடவில்லை எனினும் முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவம் கொள்ளும் (சிலம்பு. காடுகாண் காதை 64–66) என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுவதிலிருந்து குறிஞ்சிக்குரிய பொருளும் முல்லைக்குரிய பொருளும் இணைந்து பாலைத் திணைக் கவிதைகளில் வழங்கப்பெறும் என்பது பெறப்படுகிறது.

இதிலிருந்து பாலைத்திணைக் கவிதைகளில் பயின்று வந்துள்ள நாஞ்சில் என்னும் சொல் குறிஞ்சித் திணையின் மயக்கம் என்று கொண்டால், நாஞ்சில் என்பது மலையையும் மலை சார்ந்த நிலத்தை உழுவதற்கு உதவும் கலப்பையையும் குறிக்கச் சங்கக் கவிதைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

எனவே, நாஞ்சில் என்பது மலைநாட்டு மக்களின் பண்பாட்டைப் பறைசாற்றும் ஒரு கலைச்சொல்லாகச் சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது என்பது இக்கட்டுரையின் வழி பெறப்படுகிறது.

நாஞ்சில் என்பது தற்காலத்தில் ஒரு வட்டாரமாகக் கருதப்பெறுகின்றது; மலை நாட்டு மக்களைக் குறிக்கும் சொல் நாஞ்சில் என்றும் அவர்கள் பேசும் மொழி மலையாளம் என்றும் பொருள் கொள்ளத் தோன்றுகிறது. தற்காலத்தில் நாஞ்சில் நாடன் என்றும் நாஞ்சில் சம்பத் என்றும் நாஞ்சில் வள்ளுவன் என்றும் தாம் பிறந்த வட்டாரத்தைப் பெயருக்கு அடையாகப் பொருத்தி வழங்கப்படுவதும் இங்கு எண்ணத்தக்கது.

நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி நாஞ்சில் என்பதற்கு கலப்பை என்றும் மதிலுறுப்பு என்றும் பொருள் கூறுகிறது. அவற்றுள் கலப்பை என்பது சங்க இலக்கியங்களில் பலவிடங்களில் காணப்படுகின்றது. மதிலுறுப்பு என்பது கால மாற்றத்தில் நாஞ்சில் என்னும் சொல் பெற்ற பொருள் மாற்றத்தைக் குறிப்பதாக அமைகின்றது. இது ஆய்வுக்குரியது.

நாஞ்சில் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் அறியப்பட்ட மலை என்னும் பொருள் தற்காலத்தில் வழங்கப்பெறவில்லை. அதற்குச் சான்றாக மேற்கண்ட தமிழ் மொழி அகராதியைச் சுட்டலாம்.

## பயன்பட்ட நூல்கள்


- இளவரசு. சோம. (உ.ஆ.), நன்னூல் சொல்லதிகாரம் காண்டிகையுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, நான்காம் பதிப்பு 2003
- கதிரைவேற் பிள்ளை. நா., தமிழ் மொழி அகராதி, ஆசியக் கல்வியியல் நிறுவனம், புது தில்லி, சென்னை, பன்னிரெண்டாம் பதிப்பு 2002
- சாமிநாதையர். உ.வே. (ப.ஆ.), இளங்கோவடிகளருளிச்செய்த சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, பன்னிரெண்டாம் பதிப்பு 2013
- சாமிநாதையர். உ.வே. (ப.ஆ.), பத்துப்பாட்டு மூலமும் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, எட்டாம் பதிப்பு 2017
- சாமிநாதையர். உ.வே. (ப.ஆ.), பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, பத்தாம் பதிப்பு 2018
- சாமிநாதையர். உ.வே. (ப.ஆ.), பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, எட்டாம் பதிப்பு 2017
- செயபால். இரா. (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., அம்பத்தூர், சென்னை, ஐந்தாம் பதிப்பு 2014
- பாண்டியராஜா. பா., http://tamilconcordance.in
- பாலசுந்தரம். ச., பாவலரேறு (உ.ஆ.), மாதையன். பெ. (ப.ஆ.), தொல்காப்பியம் (தொகுதி –2), ஆராய்ச்சிக் காண்டிகையுரை, பெரியார் பல்கலைக்கழகம், சேலம், முதற்பதிப்பு 2012
- பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., அம்பத்தூர், சென்னை, ஐந்தாம் பதிப்பு 2014
- மாதையன். பெ., சங்க இலக்கியச் சொல்லடைவு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு 2007
- விசுவநாதன். அ. (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., அம்பத்தூர், சென்னை, ஐந்தாம் பதிப்பு 2014

